# பகவத் பாதை

## BAGAVATH PATHAI

தமிழ் மாத இதழ்

மலர் 6 | இதழ் 9 | நவம்பர் 10, 2019 | வருடச்சந்தா ரூ 100/- Volume : 6 | Issue 9 | November 10th, 2019 | Annual Subscription Rs. 100/-



ஞானம் என்பது ஓர் அனுபவம் அல்ல



# பகவத் பாதை

தமிழ் மாத இதழ்

நமக்கு ஏற்படும் அனைத்து அனுபவங்களையும் அவை போக்கில் விட்டு விட்டால், அவை அனைத்தும் தாமாகவே தோன்றி, தாமாகவே மறைந்து விடுகின்றன. இதுதான் நமது மனதின் இயல்பான நிலை.

இந்தத் தகவலைப் புரிந்து கொள்வதுதான் ஞானம்.

இந்த ஞானத்தைப் புரிந்துகொண்டு நமது முயற்சிகளைக் கைவிட்ட நிலையில் - மனோரீதியான அடைவிடத்தை கைவிட்ட நிலையில் நமது எல்லாப் பிரச்சினைகளும் முடிவுக்கு வந்துவிடுகின்றன.

– ஸ்ரீ பகவத்

## சென்னையில் ஸ்ரீ பகவத் மிஷன் நடத்தும்

# ஒரு நாள் ஞான முகாம்



நாள் : 15.12.2019 ஞாயிற்றுக்கிழமை    நேரம் : 9:30am to 6:00pm

இடம் : Acupuncture Home, 120/956, Poonamallee High Road,
Opp to Sudha Udupi Hotel, (Dasaprakash Bus stop) Purasaivakkam, Chennai.

நிகழ்ச்சி மற்றும் உணவுக்கான செலவுப் பகிர்வு ரூ. 300/- ஒருவருக்கு.

தேடுதல் உள்ள நண்பர்களுடனும்
உறவினர்களுடனும் கலந்து கொண்டு பயனடைய வேண்டுகிறோம்.

## நிகழ்ச்சி நிரல்

| | | |
|---|---|---|
| 9:15am – 10:00 am | – | பங்கேற்பாளர்கள் பதிவு செய்தல். |
| 10:00 am – 10:15 am | – | வரவேற்புரை<br>ஸ்ரீபகவத் மிஷன்,<br>சென்னை தலைவர்,<br>திரு. **ரவிச்சந்திரன்** அவர்கள்<br>அறிமுக உரை<br>சென்னை, ஸ்ரீபகவத் மிஷன்,<br>செயலர்<br>திரு. **தியாகராஜன்** அவர்கள். |
| 10:15 am - 11:30 am | – | ஞானப் புரிதல் (ஞானம், முக்தி)<br>திரு. **சரவணன்**, சேலம். |
| 11.30 am -12 pm | – | தேனீர் இடைவேளை |
| 12 pm – 1 pm | – | "நான் யார்?"<br>திரு. **ஜீவமணி**, சேலம். |
| 1 pm – 2 pm | – | உணவு இடைவேளை |
| 2 pm – 3 pm | – | சிந்தனையும் சிந்தித்தலும்<br>திருமதி. **முத்துலட்சுமி** சென்னை. |
| 3 pm – 4 pm | – | தியானப் பயிற்சிகள்<br>திரு. **சந்திரசேகர்** சென்னை. |
| 4 pm – 4.30 pm | – | தேனீர் இடைவேளை |
| 4.30 pm – 5.30 pm | – | புரிதல் சார்ந்த குழப்பங்கள் /<br>கேள்விகள்-பதில்கள்.<br>திரு. ஆனந்த் சென்னை |
| 5.45 pm to 6.00 pm | – | நன்றியுரை<br>திருமதி. **வடிவு அம்மாள்**, சென்னை. |

விபரங்களுக்கு

ஆனந்த் - 9884348800    முத்துலட்சுமி - 8838229095
ஜான்சி - 9600029023    ரவிச்சந்திரன் - 9444402986

## உள்ளே


ஞானம் என்பது ஓர் அனுபவம் அல்ல 3
ஸ்ரீ பகவத் குடில்கள் 6
கேள்வி பதில் 7
நிகழ்ச்சி நிழல்கள் 10
ஆசிரியர் பகுதி 11
ஜென்கதை - நிழலை நிர்வாகம் செய்யாதே 12


கூடுதல் தகவல்களைப் பெற விரும்புகிறீர்களா? (அ) பாதையை நண்பர்களுக்கு அனுப்ப விரும்புகிறீர்களா?




Sri Bagavath Mission


31, Ramalingasamy Street, Ammapet,
Salem - 636 003. Tamilnadu India
www.sribagavathmission.org
www.sribagavath.org
E-mail : sribagavathmission@gmail.com

V.A.P. SHARAVANAN - 99942 05880
Dr. N. KAILASAM - 94432 90559
K.S. JEEVAMANI - 97891 65555



This book Designed by
SRI ESPARI GRAPHICS, Salem-3.
Cell : 90926 46260, 98651 34075



# ஞானம் என்பது ஓர் அனுபவம் அல்ல



- ஸ்ரீ பகவத்

ஞானம் அடைவதுதான் ஆன்மிகத்தில் உயர்ந்த நிலை என்று பலரும் கருதுவதுண்டு.

அது ஒரு வகையில் சரி. இன்னுமொரு வகையில் சரியன்று.

ஆன்மிகத்தில் உயர்ந்த நிலை என்பது முக்தி என்று சொல்லக்கூடிய விடுதலையையே.

ஞானம் என்பது ஒரு பாதைதான். ஆனால் நாம் சேர வேண்டிய இடம் முக்தி – விடுதலை.

பலர் ஞானத்தையும் முக்தியையும் இணைத்துப் பேசிவிடுகின்றனர். இதனால் தேவையற்ற குழப்பம் ஏற்பட்டுவிட்டது.

ஞானம் என்று ஒரு நிலையே கிடையாது. முக்தி என்றுதான் ஒரு நிலை இருக்கிறது.

நாம் சென்னைக்குப் போவதற்காக காரில் பயணம் செய்கிறோம். வழியில் ஓரிடத்தில் நாம் செல்லும் ரோடு இரண்டாகப் பிரிகிறது. ஒரு ரோடு வடக்கு நோக்கிச் செல்கிறது. இன்னுமொரு ரோடு தெற்கு நோக்கிச் செல்கிறது.

சென்னைக்குச் செல்ல நாம் வடக்காகச் செல்லும் ரோட்டைத் தேர்ந்தெடுக்க வேண்டுமா அல்லது தெற்காகச் செல்லும் ரோட்டை தேர்ந்தெடுக்க வேண்டுமா என்று நமக்குப் புரியவில்லை.

அங்கு நின்று கொண்டிருக்கும் ஒருவரை விசாரிக்கிறோம். அவர் வடக்காகச் செல்லும் ரோட்டைத் தேர்ந்தெடுக்குமாறு கூறுகிறார்.

இது ஒரு தகவல் மட்டுமே. அந்தத் தகவலைப் பயன்படுத்தி சென்னையை அடைகிறோம்.

தகவல் என்பது நாம் அடையவேண்டிய முடிவிடம் அல்ல. அதைப் பயன்படுத்துவதன் மூலம் நாம் அடைய வேண்டிய முடிவிடத்தை அடைகிறோம்.

ஞானம் என்பதும் இத்தகைய தகவல் போன்றதே. அது ஓர் அறிவுபூர்வமான தகவல் மட்டுமே. அந்தத் தகவலை பயன்படுத்துவதன் மூலம் நாம் அடையவேண்டிய முக்தி நிலையை அடைகிறோம்.

முக்தி என்று ஒரு நிலை உள்ளது. ஆனால் ஞானம் என்று ஒரு நிலையே கிடையாது. ஞானம் என்பது ஒரு தகவல் மட்டுமே.

வடக்கே அமைந்திருப்பதை ஒரு ரோடு என்று கூறலாம்.

ஆனால் "வடக்காகச் செல்லும் ரோட்டில் போனால் சென்னையை அடைந்துவிடலாம்" என்ற தகவலை ஒரு ரோடு என்று குறிப்பிட முடியுமா?

அதனை ஒரு செய்தி என்று வேண்டுமானால் குறிப்பிடலாம்.

தகவல் என்பது அறிவு பூர்வமான ஒரு செய்தி மட்டுமே. அது ஓர் அனுபவம் அல்ல.

நாம் சரியான ரோட்டைத் தெரிந்துகொண்டால் நமது பயணம் சரியானதாக இருக்கும். சரியான தகவல் கிடைக்காவிட்டால் பயணம் தவறாகிவிடும்.

சென்னைக்கு எப்படிப் போக வேண்டும் என்ற தகவல் மூலம் சரியான ரோட்டில் பயணம் அமைகிறது.

முக்தி என்பது ஓர் உண்மையான நிலை. அது ஓர் உயிரோட்டமான நிலை.

ஆனால் ஞானம் என்பது ஒரு நிலை அல்ல. அது ஒரு தகவல் மட்டுமே.

அதாவது முக்தியை அடைய நாம் என்ன செய்ய வேண்டும். என்ன செய்யக்கூடாது என்ற ஒரு தகவல் மட்டுமே; ஒரு செய்தி மட்டுமே.

சிலர் முக்தி நிலைக்கு ஞானம் என்ற பெயரைக் கொடுத்து விடுகின்றனர்.

அதனால் ஞானத்தையும் ஓர் அனுபவ நிலையாக எடுத்துக் கொள்கின்றனர். ஞானம் வேறு, முக்தி வேறு என்ற உண்மையையும் புரிந்துகொள்ளமுடியாமல் இருந்துவிடுகின்றனர்.

ஞானம் வேறு, முக்தி வேறு என்பதை நாம் புரிந்து கொண்டாலொழிய ஞானத்தையும் தெரிந்துகொள்ள முடியாது. முக்தியையும் அடைந்திட முடியாது.

ஞானத்தையும் முக்தியையும் பிரித்துப் பார்க்கத் தெரியாமல் ஒன்றாகவே எடுத்து குழம்பி கொள்வதற்கும் ஒரு நியாயமான காரணம் உள்ளது.

வடக்காகப் போகும் ரூட்டில் போனால் சென்னைக்குப் போகலாம். தெற்கே போகக்கூடாது – என்ற தகவலைப் போன்றதுதான் ஞானம் என்று பார்த்தோம்.

இந்தத் தகவலைப் பயன்படுத்தி வடக்காகப் பயணம் செய்து சென்னையை அடைகிறோம்.

இப்படித்தான் ஞானம் என்ற தகவலும் உள்ளதா?

அந்தத் தகவலை பயன்படுத்தி முக்தியை அடைய

வேண்டுமா?

நாம் பயணம் செய்து சென்னையை அடைவது வேறு, முக்தியை அடைவது வேறு.

நமக்குத் தெரிந்த செய்திகளும் உதாரணங்களும் சென்னைக்குப் பயணம் செய்து சென்னையை அடைவதாகவே உள்ளன.

ஆனால் முக்தியைப் பொறுத்தவரை நடைமுறை உண்மை வேறுவிதமாக உள்ளது.

முக்தி அடைய நாம் பயணம் செய்யத் தேவையில்லை. முயற்சி செய்யத் தேவையில்லை.

முக்தி என்பது மிக உயர்ந்த ஒன்றுதான். அதில் எந்த சந்தேகமும் இல்லை. மனித வாழ்வின் இலக்கும் முக்தி தான். அதிலும் எந்த சந்தேகமும் இல்லை.

ஆனால் முக்தி என்பது அடைய வேண்டிய ஒன்று அல்ல. நாம் இருக்கும் நிலையே முக்தி நிலைதான். நமது இயற்கை நிலையே முக்தி நிலைதான்.

முக்தி நிலை என்பது என்ன?

நம் மனதின் கள்ளங்கபடமற்ற குழந்தைத் தன்மைதான் – innocent stateதான் முக்தி நிலை.

குழந்தையின் செயல்பாடு எப்படி உள்ளது என்பதை நாம் பார்த்திருக்கிறோம்.

அது எவ்வாறு உள்ளது?

இரண்டரை அல்லது மூன்று வயது உள்ள ஒரு குழந்தை செயல்படுவதைப் பார்த்திருக்கிறீர்களா?

அந்தக் குழந்தை தனது உணர்ச்சிகளை சுதந்திரமாக வெளிப்படுத்தும்.

அது மகிழ்ச்சியை வெளிப்படுத்தும், பயத்தை வெளிப்படுத்தும், கோபத்தை வெளிப்படுத்தும்.

ஆனால் அப்படி, தான் வெளிப்படுத்திய உணர்ச்சியை அது எப்போதாவது குற்றமாக எடுத்துக் கொள்ளுமா? குற்ற உணர்ச்சியாக எடுத்துக் கொள்ளுமா? Guilty ஆக அது எப்போதாவது எடுத்துக் கொள்ளுமா?

குழந்தை எந்த உணர்ச்சியையும் தவறாக எடுத்துக் கொள்ளாது. எந்த உணர்ச்சியையும் அது உயர்வாகவும் எடுத்துக் கொள்ளாது.

அந்தக் குழந்தைக்கு அறிவு உள்ளதா?

அறிவு இல்லாததால் அதற்கு குற்ற உணர்ச்சி இல்லையா?

அந்தக் குழந்தைக்கும் அறிவு உள்ளது. அந்த அறிவைப் பயன்படுத்திதான் அது தன்னுடைய தாயையும் தந்தையையும் அடையாளம் தெரிந்து கொள்கிறது. தனக்கு வேண்டியதை தாய் தந்தையிடமே கேட்கிறது. தாய் தந்தை அல்லாத – பழக்கமில்லாத அன்னியரிடம் இருந்து ஒதுங்கி விடுகிறது.

குழந்தைகூட தனது செயலுக்கு அறிவை பயன்படுத்துகிறது. அதேநேரம் தனது உணர்ச்சிகளை எப்படி வைத்துக்கொள்ளவேண்டும் என்று தனக்கு எதிராகப் போராடுவதில்லை.

ஆனால் அறிவு வளர வளர நாம் நமது உணர்ச்சிகளுக்கு எதிராகவும் போராட ஆரம்பித்து விடுகிறோம்.

அறிவின் தலையீடு இல்லாமல் நம் மனது செயல்படுமேயானால்

நம் மன உணர்ச்சிகள் அனைத்தும் தாமாக வந்து, தாமாக மறைந்துவிடுகின்றன.

நமது உணர்ச்சிகள் அனைத்தும் நம் அறிவினுடைய குறுக்கீடு இல்லாமல் விடுதலை பெற்று பிரவாகமாக – ஓர் ஆற்றைப் போல இயங்குவதைதான் விடுதலை அல்லது முக்தி என்று கூறுகிறோம்.

நம் மனதின் இயற்கையான நிலையே இந்தப் பிரவாக நிலைதான்.

இந்த இயற்கையான நிலையைதான் முக்தி நிலை என்று கூறுகிறோம்.

இதுதான் நம் மனதின் ஆரோக்கியமான நிலை. நம் மனது ஆரோக்கியமாகச் செயல்படுகிறது என்றால் அது முக்தி நிலையில் செயல்படுகிறது என்று பொருள்.

நம் உடலில் ஐந்து விதமான பொறி புலன்கள் இருக்கின்றன.

காதால் கேட்கிறோம்; கண்களால் பார்க்கிறோம். நாசியால் சுவாசிக்கிறோம் உடலால் தொட்டு உணர்கிறோம், நாவினால் சுவைக்கிறோம்.

நமது புலன்கள் எவற்றோடு தொடர்பு கொள்கின்றனவோ, அவற்றை நமது புலன் உணர்வாக பிரதிபலித்துக் காட்டுகின்றன.

ஓர் ஓசையை நாம் கேட்போமானால் அது ஒரு கண நேரம் மட்டும் நமது காதுகளில் சப்தமாகப் பிரதிபலிக்கிறது.

ஒரு மின்னல் வெளிச்சம் ஏற்படும்போது அந்தக் கணத்தில் மட்டும் அந்த மின்னலின் தோற்றம் நமது கண்களில் மின்னலின் காட்சியாகத் தோன்றி மறைந்து விடுகிறது.

இப்படி நமது புலன்கள் அனைத்தும் ஒரு பிரதிபலிப்பை ஒரு கண நேரம் மட்டும் ஏற்படுத்தி விட்டு பிறகு அந்த பிரதிபலிப்பில் இருந்தும் விடுபட்டு விடுகின்றன.

ஒரு நிலைக்கண்ணாடியானது தன் முன்னால் எதிர்ப்படும் காட்சியை மட்டுமே காட்டுகிறது.

கண்ணாடி முன்னால் புதிது புதிதாக நபர்களோ காட்சிகளோ வரும்போது கண்ணாடியும் புதுப்புது காட்சியையே காட்டும் தன்மையில் உள்ளது.

அது எந்த காட்சியையும் பிடித்து வைத்துக் கொள்வதில்லை.

இப்படிதான் நம்முடைய அத்தனை புலன்களும் இயங்குகின்றன.

நமது புலன்களில் பிரதிபலிக்கும் அனுபவங்களும் கணந்தோறும் வந்து மறைந்து விடுகின்றன.

நாவில் எந்தச் சுவையும் கண நேரத்துக்கு மேல் நீடித்து இருப்பதில்லை.

கண்களில் எந்தக் காட்சியும் கண நேரத்துக்கு மேல் நீடித்து இருப்பதில்லை.

காதுகளில் எந்த சப்தமும் கண நேரத்துக்கு மேல் நீடித்து இருப்பதில்லை.

அவை அப்படி நீடித்து இருக்கும் பட்சத்தில் அந்தப் புலன்கள் தன் ஆரோக்கியத்தை இழந்து பழுதடைந்துவிட்டன என்பதே ஆகும்.

நமது புலன்கள் அனைத்தும் ஒரு நிலைக்

கண்ணாடியைப் போல் செயல்படுவதுதான் புலன்களின் ஆரோக்கியமான செயல்பாடு ஆகும்.

ஆரோக்கியமான நிலையாகும்.

நமது புலன்கள் அனைத்துக்கும் அப்படிதான் செயல்படத் தெரியும். அதுதான் புலன்களின் இயற்கை.

நம்மிடம் இயங்கும் ஐந்து புலன்களை அடுத்து ஆறாவதாகவும் ஒரு புலன் உள்ளது.

அந்த ஆறாவது புலன்தான் நம்முடைய மனம்.

நமது மனமும் ஒரு நிலைக்கண்ணாடியைப் போல்தான் செயல்படுகிறது.

நிலைக்கண்ணாடி எப்படித் தன்னில் பிரதிபலிக்கும் காட்சிகளை பிடித்து வைத்துக்கொள்வதில்லையோ, அப்படி மனமும் தன்னில் வெளிப்படும் உணர்ச்சிகளை பிடித்து வைத்துக் கொள்வதில்லை. எண்ணங்களும் உணர்வுகளும் கணந்தோறும் தோன்றி மறைந்துகொண்டே இருக்கின்றன.

ஆனால் நமது அறிவு வளர வளர நமது உணர்ச்சிகளுக்கு எதிராகவும் நமது அறிவு போராட ஆரம்பித்துவிடுகிறது.

இந்தப் போராட்டமே நமது அனைத்துப் பிரச்சினைகளுக்கும் காரணமாக அமைந்துவிடுகிறது.

”மனோரீதியான ஓர் உன்னத நிலையை – நல்ல நிலையை அடைய வேண்டும்” என்பதை அடைவிடமாகக் கொண்டு நாம் போராடிவிடுகிறோம். நல்ல மனோ அனுபவத்தைப் பிடித்துவைத்துக் கொள்ளவேண்டும்; மோசமான அனுபவத்தை அப்புறப்படுத்திவிடவேண்டும் என நமக்கு நாமே போராடிவிடுகிறோம். இந்தப் போராட்டத்தின் காரணமாகவே நமது மனோரீதியான பிரச்சினைகள் அனைத்தும் மீண்டும் மீண்டும் உறுதி செய்யப்பட்டு விடுகின்றன.

நாம் தங்குமிடம் எதையும் வைத்துக்கொள்ளாத நிலையில் நமது மன இயக்கம் அனைத்தும் தாமாக இயங்கி தம்மைத் தாமே சுத்தப்படுத்திக்கொள்கிறது.

அப்படியானால் நாம் அடைவதற்கு என்று உண்மையிலேயே எந்த அடைவிடமும் கிடையாதா?

நாம் அடையத் தகுந்த பூரண நிலை என்று எதுவுமே கிடையாதா?

இருக்கிறது; நிச்சயமாக இருக்கிறது.

ஆனால் அந்த நிலையில்தான் நாம் ஏற்கெனவே இருந்து கொண்டிருக்கிறோம்.

நமது மனதின் இயல்பான நிலையே முக்தி என்ற விடுதலைதான்.

நான் இளைஞனாக இருந்தபோது சட்டக் கல்லூரியில் சேருவதற்காக முதன்முதலாக சென்னை சென்றிருந்தேன். அப்போதுதான் சென்னையை நேரில் முதன்முறையாகப் பார்க்கிறேன்.

சென்னை திருவல்லிக்கேணியில் வழக்கறிஞர் ஒருவரை சந்தித்து எனது சட்டப் படிப்பு சம்பந்தமான விவரங்களைத் தெரிய வேண்டியது இருந்தது.

மாலை 5 மணியளவில் அவருடைய அலுவலகத்துக்குச் சென்றேன். எனக்குத் துணையாக எனது தந்தையும் வந்திருந்தார். நாங்கள் போகும்போது வழக்கறிஞர் அவரது அலுவலகத்தில் இல்லை. அவர் வருவதற்கு இரவு 8 மணி ஆகும் என்று கூறினார்கள்.

ஆகவே நானும் எனது தகப்பனாரும் நேரப்போக்காக தெரு வழியே கொஞ்ச தூரம் நடந்து போகலாம் என்று முடிவு செய்து நடந்து போனோம். எங்கள் இருவருக்குமே சென்னையைப் பற்றி எதுவுமே தெரியாது.

நாங்கள் தொடர்ந்து நடந்து செல்லும்போது எங்களுக்கு எதிராக கடற்கரை வந்தது. அந்தக் கடற்கரைக்குச் சென்று, ஓரமாக மீனவர்கள் நிறுத்தி வைத்திருந்த கட்டுமரத்தின்மீது உட்கார்ந்து பேசிக்கொண்டிருந்தோம்.

அப்போது நாங்கள் இருவரும் எங்களுக்குள் பேசிக் கொண்டோம்.

”சென்னையில் மெரினா பீச் என்று மிகப்பிரபலமாகக் கூறுகிறார்கள். அந்த மெரினா பீச்சுக்கும் ஒருநாள் போகவேண்டும்”

–இப்படி நாங்கள் பேசிக்கொண்டோம்.

பிறகு நான் சட்டக் கல்லூரியில் படிக்கும்போது திருவல்லிக்கேணியில்தான் தங்கி இருந்தேன்.

பிறகுதான் தெரிந்தது அன்று நாங்கள் உட்கார்ந்து பேசிக்கொண்டிருந்ததுதான் மெரினா பீச் என்று.

இப்படிதான் நாம் இருக்கும் இடத்தைப் புரிந்துகொள்ளாமல் எதையோ தேடிவிடுகிறோம்.

ஆனால் நாம் இருக்கும் இடமே மெரினாதான் என்ற தகவலைப் பயன்படுத்தி, நாம் பயணிக்கத் தேவையில்லை என புரிந்து கொண்டாலே போதும்.

ஞானத் தெளிவு என்பது பயிற்சிகளால் ஏற்படும் ஒன்றல்ல. இங்கு தேவை புரிந்துகொள்வது மட்டுமே.

எதைச் செய்ய வேண்டும்; எதைச் செய்யக்கூடாது என்பதை நாம் புரிந்துகொண்டால் மட்டும் போதுமானது.

நமது அனுபவங்களையும் உணர்வுகளையும் சீரமைத்து அவற்றை நல்ல நிலையில் வைத்துக்கொள்ள எந்த முயற்சியும் செய்யாமல்,

நமக்கு ஏற்படும் அனைத்து அனுபவங்களையும் அவை போக்கில் விட்டுவிட்டால், அவையனைத்தும் தாமாகவே தோன்றி தாமாகவே மறைந்துவிடுகின்றன.

இதுதான் நமது இயல்பான நிலை.

இந்தத் தகவலைப் புரிந்துகொள்வதுதான் ஞானம்.

இந்த ஞானத்தைப் புரிந்து கொண்டு நமது முயற்சிகளை கைவிட்ட நிலையில் – மனோரீதியான அடைவிடத்தை கைவிட்ட நிலையில் நமது எல்லா பிரச்சினைகளும் முடிவுக்கு வந்துவிடுகின்றன.

நம்முடைய மொத்த இயக்கமும் பிரவாகமாகப் போகும்போது நமது மனோரீதியான அனைத்துப் பிரச்சினைகளும் அதனோடு தாமாகவே அடித்துச் செல்லப்பட்டுவிடுகின்றன. அங்கு எந்தப் பிரச்சினையும் நிலை கொள்வதில்லை.

அடைவதல்ல முக்தி; விடுவதுதான் விடுதலை–முக்தி.

இதுவே முக்தி – மோட்சம் – விடுதலை. ★

# ஸ்ரீ பகவத் குடில்கள்



அன்பிற்கினிய ஸ்ரீபகவத் மிஷன் குடும்ப உறுப்பினர்களுக்கு வணக்கம்.

நமது ஸ்ரீபகவத் பவன் ஆசிரமம், சேலம் பெரிய கவுண்டாபுரத்தில் இயற்கை எழில் மிகு ஜருகுமலையின் அடிவாரத்தில் அமைந்துள்ளதை அனைவரும் அறிவோம்.

இங்கு ஒவ்வொரு மாதமும் ஸ்ரீபகவத் ஐயா அவர்களின் ஞான முகாம் நடைபெற்றுவருகிறது.

இதில் பலரும் கலந்துகொண்டு ஞானத்தெளிவு பெற்று செல்கின்றனர்.

ஸ்ரீ பகவத் ஐயா அவர்களின் ஆலோசனைப்படி இங்கு குடும்பத்துடன் வந்து தங்கி செல்வதற்கு எல்லா வசதிகளுடன் கூடிய 32 குடில்கள் (Cottages) கட்ட முடிவு செய்துள்ளோம்.

இந்த கட்டட பணிக்கான பூமி பூஜை வருகின்ற நவம்பர் மாதம் 24 ஆம் தேதி ஞாயிறு காலை 11:30 மணி முதல் 12 மணி வரை நடைபெற உள்ளது. அதுசமயம் அனைவரும் கலந்து கொண்டு சிறப்பிக்க வேண்டுகிறோம்.

இந்த 32 குடில்களுக்கு (cottages), 32 உறுப்பினர்களை சேர்க்க உள்ளோம். இவர்கள் இந்தக் குடில்களை தங்களது வாழ்நாள் முழுவதும் பயன்படுத்திக் கொள்வதோடு, அவர்களைத் தொடர்ந்து அவர்களது குடும்ப உறுப்பினர்களும் பயன்படுத்திக் கொள்ளலாம்.

இந்த வாய்ப்பு, உறுப்பினர்கள் தங்களது விடுமுறை நாட்களிலும் ஓய்வு நாட்களிலும் குடும்பத்துடன் வந்து தங்கிச் செல்வதோடு, ஓர் ஞானியின் அருகாமையில் தங்கிச் அவருடன் உரையாடி ஞானத் தெளிவு பெறுவதற்கும் இயற்கை வளத்தை ரசித்து ஆரோக்கியமாக வாழ்வதற்கும் மிகவும் பயனுள்ளதாக இருக்கும்.

இதற்கான உறுப்பினர் நன்கொடையாக ரூபாய் 5 லட்சம் என நிர்ணயம் செய்துள்ளோம் .

இந்தக் கட்டடப் பணி 8 மாதத்திற்குள் நிறைவடைந்துவிடும்.

இதில் உறுப்பினராக இணைபவர்கள் தங்களது உறுப்பினர் நன்கொடையை ஆறு தவணைகளாக பிரித்துக் கொடுக்கலாம்.

இதில் உறுப்பினராக இணைவதற்கு ஆர்வமும் வாய்ப்பும் உள்ளவர்கள் தகவல் தெரிவிக்க வேண்டுகிறோம். இதில் உறுப்பினர்களாக இணைய விருப்பம் உள்ளவர்களுக்கு மேலும் சில தகவல்கள் தெரிவிக்க வேண்டி இருப்பதால் ஆர்வமுள்ளவர்கள் எங்களோடு தொடர்பு கொள்ள வேண்டுகிறோம்.

அன்புடன்

**ஸ்ரீ பகவத் மிஷன்,** சேலம்-3.

**99942 05880, 97891 65555**

## SCHEDULE OF WORKSHOP ON ENLIGHTENMENT CONDUCTED by Sri Bagavath Ayya

| Date | Details |
|---|---|
| **24.01.2020 to 26.01.2020**<br>Morning 11.00 am Evening 3.00 pm | **3 Days Retreat on Enlightenment**<br>Place : Sri Bagavath Bhavan, Salem |

**ENTRY FREE**

**Donations are welcome**

**For Advance Registration**
Sri Bagavath Mission : 31, Ramalingasamy Street, Ammapettai, Salem – 3

**79041 18421, 99942 05880, 97891 65555**

V.A.P. **சரவணன்.** சேலம்.
செல் : 99942 05880

# கேள்வி? பதில்...

## துயரத்திலிருந்தும் குற்ற உணர்ச்சியிலிருந்தும் விடுபடுவது எவ்வாறு?

**கேள்வி :** எண்ண உணர்வுகளின் ஆயுள் வெறும் அரை வினாடி நேரம் என்கிறீர்கள். புரிதலுக்கு பிறகு பல எண்ண உணர்வுகளை எளிதாகக் கடந்துவிடுகிறேன். ஆனால் என்னை மிகவும் பாதிக்கும் எண்ண உணர்வுகளை என்னால் கடக்க முடியவில்லை.

என்னை பாசத்தோடு வளர்த்த தந்தைக்கு கேன்சர் நோய் வந்து மிகவும் சிரமப்பட்டார். அவர் சிரமப்படுவது எனக்கு மிகவும் கஷ்டமாக இருந்தது. எந்த வகையான சிகிச்சையும் பலனின்றி அவர் இறந்துவிட்டார். அவர் இறந்த பிறகு, "அவர் இருக்கும்போது நான் அவரை சரியாகக் கவனித்துக் கொள்ளவில்லையோ" என்ற குற்ற உணர்ச்சி என்னை இன்னும் தாக்குகிறது. அவர் இறந்து ஒரு வருடம் ஆகியும் என்னால் இதிலிருந்து விடுபட முடியவில்லை. இதிலிருந்து விடுபடுவது எவ்வாறு?

**பதில் :** எனது வாழ்க்கையில் என்னை மிகவும் பாதித்த ஒரு நிகழ்வைப் பற்றியும் அதனால் ஏற்பட்ட தாக்கத்திலிருந்து புரிதலினால் விடுபட்டு புறத்தில் எவ்வாறு செயல்பட்டேன் என்பதையும் இந்த கேள்விக்கு பதிலாக பார்ப்போம்.

ஒன்பது ஆண்டுகளுக்கு முன்பு எனது தாயாருக்கு உடல்நலக்குறைவு காரணமாக ஒரு மருத்துவ ஆய்வு மேற்கொண்டோம்.

மருத்துவ ஆய்வுக்கு பிறகு பிரதான மருத்துவரை என் தாயாருடன் சந்தித்தேன்.

மருத்துவர் என் தாயாரை வெளியே அமரச் சொல்லிவிட்டு என்னிடம் தாயாருக்கு வந்திருக்கும் நோய் பற்றிய விவரத்தை தெரிவித்தார். "உங்கள் அம்மாவிற்கு வந்திருப்பது கேன்சர் நோய். நோயின் தன்மை மிகவும் தீவிரமாக இருப்பதால் இங்கே சிகிச்சை அளிப்பதைவிட சென்னையில் பெரிய மருத்துவமனையில் சிகிச்சை எடுத்துக் கொள்வது நல்லது" என்று கூறினார்.

முதன்முதலாக இப்படி ஒரு செய்தியைக் கேட்டவுடன் மிகவும் அதிர்ச்சி அடைந்தேன். மிகுந்த மனவருத்தத்துடனும் வேதனையுடனும் என்ன செய்வது என்று தெரியாமல், எதுவும் புரியாமல் வெளியே வந்தேன்.

மிகவும் பயந்து இருந்தேன். என் பயத்தையும் என் அதிர்ச்சியையும் என் தாயாரிடம் காட்டிக்கொள்ளாமல் தைரியமாக இருப்பதைப் போல் காட்டிக்கொண்டு 'அம்மா வீட்டுக்குச் செல்லலாம்" என்று கூறி காரில் வீடு திரும்பினோம்.

காரில் நானும் என் அம்மாவும் மட்டும் வீட்டுக்கு திரும்பிக் கொண்டிருக்கிறோம். அப்போது அம்மா என்னிடம் "டாக்டர் என்ன சொன்னார்? நான் பிழைக்க மாட்டேன் என்று சொன்னாரா?" என்று கேட்டார். நான் "அப்படி எல்லாம் ஒன்றும் இல்லை. சாதாரண பிரச்சினைதானம்மா" என்று கூறினேன். அதற்கு என் அம்மா "நான் ரொம்ப நாள் உயிரோடு இருக்கப் போவதில்லை. என் உடலைப் பற்றி எனக்கு தெரியாதா?" என்று தொய்வான குரலில் கூறினார்கள். எனக்கு அழுகை பீறிட்டுக்கொண்டு வந்தது. அதை அடக்கிக்கொண்டு "அப்படியெல்லாம் பெரும் பிரச்சினை ஒன்றும் இல்லை. எதுவென்றாலும் சென்னை சென்று தேவையான மருத்துவத்தை செய்து கொள்ளலாம்" என்று சமாதானப்படுத்தினேன்.

என்னுள் இருந்த பதற்றத்தையும் மனக்குமுறலையும் அழுகையையும் வெளியில் கொஞ்சமும் காட்டிக்கொள்ளாமல் தைரியமாக இருப்பது போல் நடித்து மெல்ல வீடு வந்து சேர்ந்தோம். வீட்டில் அம்மாவை இறக்கி விட்டுவிட்டு "கொஞ்சமும் இது பற்றி கவலைப்பட வேண்டாம். இது ஒன்றும் பெரிய பிரச்சினை இல்லை. இதுவெல்லாம் இன்று மிக சாதாரணம்." என்று கூறி சமாளித்துவிட்டு அம்மாவின் முகத்தை எதிர்கொள்ள முடியாமல் காரை எடுத்துக் கொண்டு விரைவாக அலுவலகம் திரும்பினேன்.

இப்போது காரில் நான் மட்டும் தனியாக போய்கொண்டிருந்தேன். என்னுள் அடங்கியிருந்த மன அழுத்தமும் மன குமுறலும் ஒன்றுகூடி என்னை காரை ஓட்ட முடியாமல் திக்குமுக்காடச் செய்தன. என்னையும் மீறி எனது கண்களிலிருந்து கண்ணீர் தாரை தாரையாக பெருக்கெடுத்து ஓட ஆரம்பித்தன. மேற்கொண்டு காரை ஓட்ட முடியாமல் மெதுவாக ஒரு மரத்தடியில் நிறுத்தினேன். காரின் கண்ணாடிக் கதவுகளை மேலே உயர்த்திவிட்டு ஆக்ரோசமாக வெடித்துக் கதறிக் கதறி அழுதேன். எனக்கு ஆறுதல் கூற யாரும் என்னுடன் இல்லை. கிட்டத்தட்ட பதினைந்து ஆண்டுகளுக்குப் பிறகு என் கட்டுப்பாட்டையெல்லாம் மீறி பீறிட்டு கதறி அழுகிறேன் என்பது எனக்கு நன்றாகத் தெரிகிறது. இதுதான் எனக்கு நன்றாக விவரம் தெரிந்து கதறி அழுதது. ஒரு ஆண்மகன் எதற்கும் அழக்கூடாது என்று வைத்திருந்த என் கருத்து என்னுள் வந்து சென்றது. அதை எல்லாம் என் மனம் கொஞ்சமும் கேட்கவே இல்லை. பிறகு மெதுவாக ஆக்ரோஷம் குறைந்து மெல்ல குழந்தை தேம்பித் தேம்பி அழுவது போல் அழுதேன். கிட்டத்தட்ட அரை மணி நேரத்திற்குப் பிறகு நான் சற்று நிதானத்துக்கு வந்தேன்.

பிறகு எனது மூத்த சகோதரரிடம் மருத்துவமனையில் டாக்டர் சொன்ன செய்திகளைப் பகிர்ந்து கொள்வதற்காக அவரது அலுவலகத்திற்குச் சென்றேன். அவருடைய அறையில் இருந்த மற்ற நபர்களை சற்று நேரம் வெளியே இருக்கச் சொல்லிவிட்டு மருத்துவர் கூறிய செய்திகளை கூறி மீண்டும் பீரிட்டு கதறி அழுதேன்.

நான் முதன்முதலில் எதிர்கொண்ட அழுகையைவிட சற்றுக் குறைவாக இம்முறை இருந்தது.

மனதில் இன்னொருபுறம் அடுத்தகட்டமாக 'மேற்கொண்டு இனி என்ன செய்ய வேண்டும்? யாரைப் பார்க்க வேண்டும்?' என்ற புறச் செயலுக்கான திட்டமிடல் தொடங்கியது.

பிறகு வீட்டிற்கு வந்து எனது மனைவியிடம் நடந்தவற்றைக் கூறி மீண்டும் ஒருமுறை அழுது முடித்தேன்.

கிட்டத்தட்ட அன்று காலை முதல் இரவு வரை ஒரு ஐந்தாறு முறை வெவ்வேறு தருணங்களில் அழுது முடித்தேன். ஒவ்வொரு முறையும் வரும் அழுகை முந்தைய நிலைக்கு அடுத்த நிலை சற்று குறைவாகவே இருந்தது. காலையில் அரை மணி நேரம் வரை நீடித்த அழுகை இரவு ஓரிரு நிமிடமாகக் குறைந்து முடிவுக்கு வந்தது.

எனக்கு இப்படி வந்த மனவேதனைக்கும் அழுகைக்கும் நான் ஒன்றும் செய்ய முடியாது. இனி இது சம்பந்தமாக செய்யவேண்டிய புறச் செயலை சரியான அணுகுமுறையில் செய்வது ஒன்று மட்டுமே என் கையில் உள்ளது என்பதை தெளிவாகப் புரிந்து கொண்டேன்.

எனது குடும்ப உறுப்பினர்கள், மருத்துவ நண்பர்கள் என எல்லோருடனும் கலந்து பேசி அம்மாவுக்கு ஹோமியோபதி ட்ரீட்மென்ட் எடுத்துக் கொள்வது என்ற முடிவை மேற்கொண்டேன்.

ஹோமியோபதியிலும் இயற்கைக் வைத்தியத்திலும் அம்மாவுக்கு கூறப்பட்ட மருத்துவ குறிப்புகளை தினமும் முறைப்படி தவறாமல் செய்து வந்தேன்.

அவர் மனதுக்கு என்ன பிடிக்கும்? என்ன பிடிக்காது? என்பதை உணர்ந்து செயல்படத் தொடங்கினேன்.

கொஞ்ச நாட்களில் அம்மாவும் நானும் மரணத்தைப்பற்றி வெகு சாதாரணமாக பேசிக் கொள்ளும் தன்மைக்கு வந்துவிட்டோம்.

நான் அம்மாவிடம், "நாம் பிறப்பதும் நம் கைவசம் இல்லை; நாம் இறப்பதும் நம் கைவசம் இல்லை. இடையில் இருக்கும் இந்த வாழ்க்கையில் எது நடந்தாலும் நடக்கட்டும். நம்மால் முடிந்தவரை சரியான செயலைச் செய்ய வேண்டும். அது ஒன்றுதான் நம்மால் முடியும்." என்று சதா கூறிய வண்ணம் இருப்பேன்.

அம்மாவிடம், "உங்கள் மனதில் பல காலமாக தேங்கி இருக்கக் கூடிய விஷயங்கள் என்ன? நீங்கள் செய்ய முடியாமல் விட்டுப்போன கடமைகளாகக் கருதும் விஷயங்கள் எத்தனை? எல்லாவற்றையும் கூறுங்கள். இப்பொழுது நமக்கு அது முழுமையாக செய்து முடிக்கும் வாய்ப்பும் வசதியும் உள்ளன" என்று கூறி அதை அம்மாவே செய்து முடிக்கும்படி செய்தேன்.

உடல்நிலை நன்றாக இருந்த காலத்தில் சனிக்கிழமை தோறும் இயற்கை எழில் மிகுந்த ஒரு மலையில் அமைந்துள்ள பெருமாள் கோயிலுக்குச் சென்று வருவது அவரது வழக்கம். இந்த நோயினால் ஏற்பட்ட சோர்வின் காரணமாக அந்தக் கோவிலுக்குச் செல்வதை நிறுத்தி இருந்தார். நான் மீண்டும் அந்த பெருமாள் கோவிலுக்குச் சென்று வருவதற்கான சூழ்நிலையை உருவாக்கினேன். இதற்காக ஒவ்வொரு சனிக்கிழமையும் காலையில் நேரத்தை ஒதுக்கிக் கொண்டு அந்தக் கோவிலுக்கு அழைத்துச் செல்வேன். அப்படிச் செல்லும் போதெல்லாம் அம்மா தன்னுடைய பழைய நினைவுகளை ஒவ்வொன்றாக எடுத்துக் கூறத் தொடங்குவார்.

அம்மா தன்னுடைய பழைய நினைவுகளைப் பகிரும்போது நான் இடைமறித்து எதுவும் பேசுவதே இல்லை. முடிந்த வரை அவர் மனதில் இருக்கும் அழுத்தங்களும் நினைவுகளும் வெளியேறுவதில் குறுக்கிடாமல் இருப்பேன். அவர் பேசுவதை சற்றுக் குறைத்தாலும் நான் மீண்டும் அதை நினைவுபடுத்தி அந்த சம்பவத்தின் மீதியை கொட்டச் செய்துவிடுவேன். இப்படி அவர் தன் மன அழுத்தத்தையும் நினைவுகளையும் வெளியே கொட்டக் கொட்ட மனதளவில் அம்மா ரிலாக்ஸ் ஆனதை நன்கு உணர முடிந்தது.

இப்படியே கிட்டத்தட்ட ஐந்து ஆண்டுகள் போய்விட்டன.

உடல்நலக் குறைபாடுகளும் வளர்ந்து கொண்டுதான் இருந்தன.

அம்மாவுக்குத் தேவையானவற்றை செய்து கொண்டிருந்ததாலும் அம்மாவுடன் அதிக நேரம் இருந்து அம்மாவின் எண்ணங்களையும் உணர்வுகளையும் என்னுடன் பகிர்ந்து கொள்ளச் செய்ததாலும் அம்மாவுக்கு உடலளவில் தாங்க முடியாத துன்பம் இருந்தபோதும் மனதளவில் அதை எதிர் கொண்டு ஏற்றுக்கொள்ளும் தன்மையில் இருந்தார்.

ஒரு கட்டத்தில் அம்மாவின் உடல் தொந்தரவு அதிகரித்தது. அவர் கஷ்டப்படுவதைப் பார்க்கும்போது "இருப்பதைவிட இறப்பதே மேல்" என்று நான் எண்ணுமளவிற்கு அம்மாவின் உடல்நிலை மோசமானது.

அதன் பிறகு ஒருநாள் இரவு கிட்டத்தட்ட மூன்று நான்கு முறை வயிற்றுப்போக்கு ஏற்பட்டு பிறகு இயற்கை எய்தினார் அம்மா.

நான் அழுவதற்கு பதிலாக சிரித்தேன். "நீ பட்ட துன்பம் போதுமம்மா..." என்று எண்ணிக் கொண்டேன்.

எந்த அளவிற்கு நாம் ஒருவரை ஆத்மார்த்தமாக நேசித்து அவர்களுக்கு தேவையானவற்றைச் செய்கிறோமோ, அது வாழ்க்கையில் எங்காவது ஒரு தருணத்தில் அதை நாம் உணரும்படி செய்துவிடும்.

என் உடன் பிறந்த சகோதரர்கள் இருவர். ஒருவர் மூத்தவர், மற்றொருவர் இளையவர். எங்கள்

குல மரபுப்படி மூத்தவர் தந்தைக்கும் இளையவர் தாய்க்கும் ஈமக்கிரியை செய்வது வழக்கம். நான் கடந்த 5 வருடமாக எடுத்துக்கொண்ட உணர்வுபூர்வமான முயற்சிகளை உணர்ந்துகொண்ட எனது இரண்டு சகோதரர்களும் எனது தந்தையாரும் என்னை அழைத்து "அம்மாவிற்கு ஈமக்கிரியை நீயே செய்" என்று கூறினார்கள்.

எனக்கு எங்கள் குல வழக்கப்படி வராத வாய்ப்பு, நான் உள்ளுணர்வோடு செய்த செயலுக்குக் கிடைத்ததாக எண்ணி ஈமக்கிரியை முழுத் திருப்தியுடன் நிறைவாக செய்தேன்.

இதுவரை நான் கூறியது எதைக் குறிக்கிறது?

நமக்கு எவ்வளவு அதிகமான பாதிக்கக்கூடிய எண்ண உணர்வுகள் ஏற்பட்டாலும் மனதளவில் நாம் செய்வதற்கு எதுவுமில்லை என்ற புரிதலில் உறுதியாக இருந்தால் மட்டும் போதும். நாளடைவில் அந்த பாதிப்பு ஏற்படுத்திய உணர்வின் தாக்கம் குறைந்து குறைந்து அரை விநாடிக்கு வந்து மறைந்துவிடும்.

புரிதலுக்கு முன் நாம் எப்படி இருந்தாலும் அது தவறு இல்லை. புரிந்துகொண்ட பிறகு நாம் யாருக்கேனும் எதுவும் செய்ய நினைத்திருந்தால், நம்மளவில் என்ன செய்ய முடியுமோ அதை முழுமையாக செய்துவிடுங்கள். அப்படிச் செய்துவிடுவதால் நமக்கு எப்போதும் அவர்களை கவனிக்காமல் விட்டுவிட்டோமே என்ற வருத்தம் வரவே வராது. நமக்கு குற்ற உணர்ச்சியும் ஏற்படாது. அதை தவற விட்டுவிட்டு பிறகு செய்ய முடியவில்லையே என்று வருத்தப்படுவதால் பயனேதுமில்லை.

அதையும் மீறி குற்ற உணர்ச்சி ஏற்பட்டால் அதையும் ஓர் எண்ணமாக எடுத்துக் கொள்ளுங்கள். நடந்து முடிந்ததவை அனைத்தையும் மாற்ற முடியாது. முடிந்ததை முடிந்ததாக எடுத்துக்கொள்ள வேண்டும். நீங்கள் யாரை சரியாகக் கவனிக்கவில்லை என்று நினைக்கிறீர்களோ அந்த வயதுடைய யாரோ ஒரு சிலருக்கு நீங்களாக முன்வந்து உதவுவதன் மூலம் நீங்கள் செய்யத் தவறிய ஒரு சரியான செயலை செய்த மனநிறைவு உங்களுக்குக் கிடைக்கும்.

எல்லா எண்ண உணர்வுகளின் ஆயுளும் வெறும் அரை வினாடி நேரம் மட்டுமே. அவற்றோடு போராடுவதால் மட்டுமே அவை நீடிக்கின்றன. நம்மையறியாமல் போராடும் போராட்டத்திற்கும் நாம் பொறுப்பெடுக்கத் தேவையில்லை. நமக்குத் தெரிந்த பிறகு நாம் போராடாமல் இருந்தால் போதும்.

நமக்கு ஏற்பட்ட எண்ண உணர்வுக்கு நாம் எதுவும் செய்ய முடியாது என்பதைப் புரிந்து கொண்ட வினாடியே அது அரை விநாடி நேரமாக மாறிவிடும்.

★





# நிகழ்ச்சி நிழல்கள்



ஸ்ரீ பகவத் ஐயா அவர்களுடன் அக்டோபர் ஞான முகாமில் கலந்து கொண்ட அன்பர்கள்



சேலம் பெரியகவுண்டாபுரம் கிராமத்தில் ஸ்ரீ பகவத் மிஷன் நடத்திய இளைஞர்களுக்கான கபடிப் போட்டியில் வெற்றி பெற்றஅணிக்கு ஸ்ரீ பகவத் ஐயா அவர்கள் பரிசு வழங்குகிறார்கள்.



ஐயா கைகளால் ஆங்கில நூலைப் பெறும் இளந்தளிர்



ஐயாவுடன் லண்டன் அன்பர் திருமதி வாசுகி மற்றும் அவரது மகன்கள் ரிஷி, ருத்ரா



மத்தாப்பு போல் சிரிப்புடன் தீபாவளி



பொறுப்புள்ள தாத்தாவாக



ஸ்ரீ பகவத் பவன் தோட்டத்தில் ஸ்ரீ பகவத் ஐயா




மத்தாப்பு போல் சிரிப்புடன் தீபாவளி

# ஆசிரியர் பகுதி



K.S. ஜீவமணி
செல் : 97891 65555

அனைவருக்கும் சகப் பயணியின் வணக்கம்.

நமது பகவத் பாதை மாத இதழ் தொடங்கி எட்டு ஆண்டுகள் நிறைவடைந்து இந்த இதழின் மூலம் ஒன்பதாம் ஆண்டில் அடி எடுத்து வைத்திருக்கிறோம் என்பதை மகிழ்ச்சியுடன் தெரிவித்துக் கொள்கிறோம்.

ஒருசிலர் நமது மாத இதழை ஒன்றுகூட விடாமல் பாதுகாத்து வருவதாக கூறியிருக்கிறார்கள்.

தற்போது நமது மாத இதழை படிப்பவர்கள் பழைய இதழ்கள் கிடைக்குமா என்றும் கேட்கிறார்கள்.

மேலும் நாமும் நமது மாத இதழை PDF file ஆக நமது வெப்சைட்டில் யார் வேண்டுமானாலும் free download செய்துகொள்ளும்படி சேமித்து வருகிறோம். தேவையானவர்கள் இதனை பயன்படுத்திக் கொள்ளலாம்.

ஸ்ரீ பகவத் ஐயா அவர்களும் ஒவ்வொரு இதழிலும் ஒவ்வொரு கோணத்தில் ஞான புரிதலை வழங்குவது அனைவருக்கும் பயனுள்ள வகையில் இருக்கிறது.

ஞானம் என்ற உண்மையை பல்வேறு கோணங்களில் அணுகும்போது புரியாதவர்களுக்குக் கூட ஏதோ ஒரு கோணத்தில் புரிந்து விடும்.

ஞானம் என்ற மனதின் இயக்க உண்மையை நாம் ஏதோ ஒரு கோணத்தில் புரிந்து கொண்டால் போதும். எல்லா கோணத்திலும் புரிந்துகொள்ள வேண்டும் என்ற கட்டாயமில்லை.

உண்மையில் நாம் நம் அறிவைக்கொண்டு அறிவின் இயலாமையை புரிந்து கொள்கிறோம் அவ்வளவே.

இதை எந்த கோணத்தில் புரிந்து கொண்டாலும் சரி.

அந்தப் புரிதலே அகச் சரணாகதியை வழங்கி விடுகிறது.

அகச் சரணாகதி அடைந்த நிலையில் நம் மனம் பூரணத்துவம் பெற்று விடுதலையோடு இயங்கத் தொடங்கி விடுகிறது.

விடுதலைப் பெற்ற மன இயக்கத்தில் எந்தப் பிரச்சனைகளும் தங்குவதில்லை.

இதுவே மனிதகுலம் அடையவேண்டிய மிக உன்னதமான நிலை.

இந்த ஞானப் புரிதலை உலக மக்கள் அனைவருக்கும் கொண்டு செல்வதற்குத் தான் இப்பணியை நாம் செய்து வருகிறோம்.

அந்த வகையில் அக்டோபர் மாதம் நடைபெற்ற ஞான முகாமில் பல புதிய முயற்சிகளையும் மேற்கொண்டோம்.

மனதின் இயக்கத்தை புரிந்து கொள்வதற்கு உதாரண உபகரணங்களைக் கொண்டு ஆய்வு செய்து புரிந்து கொள்வதைப் போல் புதிய வழிமுறைகளை பின்பற்றினோம்.

இது எளிதாக புரிந்து கொள்ள முடியாதவர்களுக்கு கூட புரிந்து கொள்வதற்கு மிகவும் பயனுள்ளதாக அமைந்திருந்தது.

இதனால் இனிவரும் முகாம்களில் கூட இந்த வழிமுறையை பின்பற்றலாம் என எண்ணி உள்ளோம்.

மேலும் நவம்பர் மாதம் சேலம் ஸ்ரீபகவத் பவனில் ஒரு மூன்று நாள் ஞான முகாமும் டிசம்பர் மாதம் சென்னையில் ஒரு நாள் ஞான முகாமும் நடைபெற உள்ளது.

இதனைத்தொடர்ந்து ஜனவரியில் சேலம் ஸ்ரீ பகவத் பவனில் ஒரு மூன்று நாள் ஞான முகாம் ஆங்கிலத்தில் நடைபெற உள்ளது.

இதன் விபரங்கள் இந்த மாத இதழில் கொடுக்கப்பட்டுள்ளன. இந்தத் தகவல்களை தேடுதல் உள்ள உங்கள் நண்பர்களுக்கும் உறவினர்களுக்கும் தெரிவித்து அனைவரையும் பயனடையச் செய்யுமாறு அன்புடன் கேட்டுக் கொள்கிறோம்.

மேலும் நமது ஸ்ரீ பகவத் பவனில் குடும்பத்துடன் வந்து தங்குவதற்கு வசதியாக 32 அறைகளை (Bagavath Cottage) கட்ட இருக்கிறோம்.

இதற்காக ஐயாவின் கருத்துக்களில் ஆர்வம் உள்ளவர்களில் 32 உறுப்பினர்களை சேர்க்க உள்ளோம்.

இதன் விபரமும் இந்த மாத இதழில் கொடுக்கப்பட்டுள்ளது. இதில் உறுப்பினராக இணைவதற்கு ஆர்வமும் வாய்ப்பும் உள்ளவர்கள் தகவல் தெரிவிக்க வேண்டுகிறோம்.

இந்த கட்டடப் பணிக்கான பூமி பூஜை வருகின்ற நவம்பர் மாதம் 24 ஆம் தேதி ஞாயிற்றுக்கிழமை காலை 11:30 மணி முதல் 12:00 மணி வரை நடைபெற உள்ளது.

அதுசமயம் அனைவரும் கலந்து கொண்டு சிறப்பிக்க வேண்டுகிறோம்.

மனித குலம் உன்னத நிலையை அடைவதற்கான உண்மையை உலகெங்கும் கொண்டு செல்ல உண்மையை புரிந்த நாம் அனைவரும் ஒன்று கூடுவோம்.

# ஜென் கதை

## "நிழலை நிர்வாகம் செய்யாதே"

ஓர் ஆன்ம சாதகன் இருந்தான். அவன் மனஅமைதி பெறுவதற்காகவும் மனதைச் செம்மையாக்குவதற்காகவும் பல உள்முக தியான பயிற்சிகளை செய்துவந்தான். தன் மன உணர்வுகளை சீரமைப்பதற்காக தீவிரமாக முயன்று வந்தான்.

இதனால் அவனது புறச் செயல்பாடுகள் முற்றிலும் முடங்கிப் போயின. இதனால் புறத்தில் சராசரி மனிதனாகக்கூட செயல்பட முடியவில்லை. இவ்வளவு கடுமையாக முயன்றும் அகத்திலும் அமைதி ஏற்படவில்லை.

ஊரின் எல்லையில் வசிக்கும் ஓர் ஞானியைப் பற்றிக் கேள்விப்பட்டான். அவர் மிகவும் எளிமையானவராகவும், மனப் பிரச்சனைகளில் இருப்பவர்களுக்கு சரியான தீர்வு வழங்குபவராகவும் இருந்தார்.

அவரை நாடிச்சென்று தன் பிரச்சினையை எடுத்துக் கூறி மனப் பிரச்சனைகளில் இருந்து விடுபட்டு வாழ்க்கையில் வெற்றி பெறுவதற்கான தீர்வை வேண்டினான்.

ஞானி அவனிடம் "உன் மனதை நிர்வகிப்பதில் இருந்து விடுபட்டு உன் செயலில் கவனம் செலுத்து. வெற்றி தானாக உண்டாகும்." என்றார்.

ஞானியின் விளக்கம் அவனுக்குப் புரியவில்லை. தொடர்ந்து "எண்ணங்களையும் மன உணர்வுகளையும் சீரமைப்பது எப்படி?" என்ற கேள்வியையே கேட்டுக் கொண்டிருந்தான்.

ஞானி அவனுக்குப் பல விளக்கங்களைக் கொடுத்தார். ஆனால் அவனுக்கு எதுவும் புரியவில்லை. மன உணர்வுகளை சீர் அமைப்பதற்கான வழிமுறைகளையே மீண்டும் மீண்டும் கேட்டுக் கொண்டிருந்தான்.

ஞானி அவனை ஆசிரமத்திற்கு அருகில் இருக்கும் ஓர் இடத்திற்கு கூட்டிச் சென்றார். அங்கு மேடு பள்ளங்கள் நிறைந்த ஒரு பகுதியில் சேறும் சகதியுமாகவும் ஆங்காங்கே மண் திட்டுகளும் இருந்தன. அந்தப் பகுதியின் மத்தியில் செந்தாமரைப் பூக்கள் மலர்ந்து இருந்தன.

ஞானி அவனிடம் செந்தாமரை மலர்களை காண்பித்து "அதில் ஒரு மலரைப் பறித்து வா. உன் மீது எந்த கரையும் படாமல், முக்கியமாக உன் நிழல்கூட சேற்றிலும் சகதியிலும் விழுந்துவிடாமல் மிகக் கவனமாகப் பார்த்துக்கொள். உனக்கு விளக்கம் கிடைத்துவிடும்" என்றார்.

ஞானி கூறியது அவனுக்கு புதுமையாக இருந்தது. இருப்பினும் தன் நிழல் மீது மிகவும் கவனமாக நடக்கத் தொடங்கினான். தன் நிழல் சேற்றிலும் சகதியிலும் விழுந்துவிடாமல் மண் திட்டுக்களில் படுமாறு பார்த்துக் கொள்ள மிகவும் கவனமாக நடந்தான். அவன் கவனம் முழுவதும் நிழல் மீதே இருந்தது.

அவனது முழு கவனமும் நிழல் மீதே இருந்ததால், கால் இடறி பள்ளத்தில் இருக்கும் சேற்றிலும் சகதியிலும் விழுந்தான். அவனது உடை முழுவதும் சேறும் சகதியுமாகிவிட்டது. அவன் என்ன செய்வது என்று தெரியாமல் விழித்தான்.

ஞானி "கரை படாமல் பறித்து வா என்றால் இப்படி சேறையும் சகதியையும் ஆக்கி கொண்டாயே" என்றார்.

அவன், "சுவாமி என் மீது கரை படாமல் மலரைப் பறிக்க வேண்டுமென்றால் கவனம் நான் கால் வைக்கும் இடத்தில் அல்லவா இருக்க வேண்டும். நிழல் எங்கு விழுந்தால் என்ன? சேற்றில் விழுந்தாலும் ஒன்றுதான், புல்தரையில் விழுந்தாலும் ஒன்றுதானே?! நீங்கள் ஏன் நிழல் மீது கவனத்தைச் செலுத்த சொன்னீர்கள்" என்று கோபமாகக் கேட்டான்.

ஞானி, "நீ இதுவரை அப்படித் தானேப்பா முயற்சி செய்து கொண்டிருக்கிறாய்?" என்றார்.

அவன் "சுவாமி நீங்கள் என்ன சொல்ல வருகிறீர்கள்? சற்றுப் புரியும்படி கூறுங்களேன்" என்றான்.

மீண்டும் ஞானி அதே மலரைக் காண்பித்து, "இப்பொழுது உன் நிழலை நிர்வாகம் செய்வதை விட்டுவிடு, உன் மீது கரை படாமல் அந்த மலரைப் பறித்து வா" என்றார் ஞானி.

அவனது முழுக் கவனமும் தனது காலை சேற்றில் வைத்துவிடாமல் மண் தரையில் வைத்து சென்று மலரைப் பறிக்கும் செயலில் மட்டுமே இருந்தது. நிழலை நிர்வாகம் செய்வதை மறந்து போனான். மலரைப் பறித்து ஞானியிடம் கொண்டு சேர்த்தான்.

ஞானி, "இப்பொழுது புரிகிறதா? நமக்கு மனம் என்ற அக உலகமும் இருக்கிறது. வெளிச் செயல் என்ற புற உலகமும் இருக்கிறது. அக உலகம் என்ற மனதில் தோன்றும் எண்ணங்களும் உணர்வுகளும் நமது நிழலைப் போன்றது. நமது புறச் செயல்களும் புற உலகமுமே நிஜமாகும். நிழலை நிர்வாகம் செய்ய வேண்டிய அவசியம் நமக்கு எப்போதும் கிடையாது. புற உலகமே நிஜம். நாம் நிர்வகிக்க வேண்டிய இடமும், செயல் புரிய வேண்டிய இடமும் புறமே. இதுவே நம் வாழ்க்கையின் வெற்றிக்கு வழி" என்றார்.

சாதகன் இதுவரை மனதில் தோன்றும் எண்ணங்களையும் உணர்வுகளையும் சரி செய்ய எடுத்த முயற்சிகள் அனைத்தும் தன் நிழலை (அகத்தை) நிர்வாகம் செய்வதற்குச் சமம் என்பதைப் புரிந்துகொண்டான். இனி தன் கவனம் முழுவதும் புறத்தில் தனக்குத் தேவையான செயலில் ஈடுபடுவதற்குதான் என்பதையும் நன்கு புரிந்து கொண்டு ஞானிக்கு நன்றி கூறி விடை பெற்றான்.

Registration Number of the Registered News Paper TNTAM/2014/57698 | Postel Registration Number : TN/WR/SL(E)/22/2018-2020
Date of publication : First Week of Every Month | Posted at Salem HOP 636001. On 10th of every month.

Published by Shri. V.A.P. Sharavanan on behalf of the Sri Bagavath Mission, 31, Ramalingasamy Street, Ammapet, Salem-636 003. Tamilnadu. India.
Printed by Shri. R. Jayavel at Sree Jayavel Press, 08/11, Gandhi Maidanam, Ammapettai, Salem-636 003. Editor : Shri. K.S. Jeevamani Cell : 97891 65555